REGD. No: TN MS (C) 244 ANNA (Tamil Daily) MADRAS Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு




# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்




மலர்: 1 சென்னை 21—9—1977 புதன் வெளியூர் 22—9—1977 வியாழன் இதழ் 336



கழகப் பொதுக்குழுவில் பொதுச்செயலாளர் புரட்சித்தலைவர், துணைப் பொதுச் செயலாளர் நாஞ்சிலார் உரையாற்றிடும் காட்சி.

## ஜேப்பியார் அறிவிப்பு

# கருணாநிதி சிலையை அகற்ற போராட்டம்

சென்னை, செப். 21. சென்னை அண்ணாசாலையில் அமைந்துள்ள கருணாநிதியின் சிலையை அகற்றக் கோரியும், கருணாநிதி மாளிகை என்ற பெயரை மாற்றக் கோரியும் அக்டோபர் மாதம் பெரும் போராட்டம் நடத்தப்படும் என்று ஜேப்பியார் அறிவித்தார்.

இப்போராட்டம் மதுரைமுத்து எம். எல். சி. தலைமையில் நடைபெறும் என்றும் ஜேப்பியார் அறிவித்தார்.

சென்னை மாவட்ட அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் செயலாளர்கள், சென்னை மாவட்ட எம்ஜிஆர் மன்ற செயலாளர்கள் சென்னை மாவட்ட கழக மகளிர் பிரிவுச் செயலாளர் ஆகியோரின் அவசர ஆலோசனைக் கூட்டம் இன்று (புதன் கிழமை) காலை சென்னையில் கூடியது.

கூட்டத்திற்கு மதுரை முத்து எம். எல். சி. தலைமை தாங்கினர்.

புதுக்கோட்டை பாப்பையன், ஜேப்பியார், அப்துல்காதர் எம். பி. ஆகியோர் கூட்டத்திற்கு முன்னிலை வகித்தனர்.

கருணாநிதி தனது ஆட்சி காலத்தில் தனது பெயரை விளம்பரப்படுத்திக் கொண்ட உச்சகட்ட வெறியால் நடத்திய விழாக்கள் விளம்பரங்கள் பற்றி கூட்டத்தில் விவாதிக்கப்பட்டது:

பொது வாழ்வைக் களங்கப்படுத்தி சமூக விரோதிகளாய்— கழக விரோதியாய் லஞ்ச ஊழல் குற்றவாளியாய் நின்று ஒழுக்கக்கேட்டிற்கு சமூக மரியாதை தர முயன்ற கருணாநிதியின் பெயர்கள் எதுவும் தமிழகத்தில் இனியும் அனுமதிக்கப்படக் கூடாது என்று கூட்டத்தில் பேசிய பலரும் வலியுறுத்தினார்கள்.

சாலைகள், நகர்கள், பள்ளிகள், கல்லூரிகள், விளையாட்டுக் கூடங்கள், கட்டிடங்கள், திருநல்புல இப்படி எல்லாவற்றிற்கும் அரசு அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்து தன் பெயரை வைத்துக் கொண்ட கருணாநிதியை எதிர்த்துப் போராட்டம் நடத்துவது என்று இந்த அவசர ஆலோசனைக் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டதாக ஜேப்பியார் தெரிவித்தார்.

இப்போராட்டத்தின்

(2-ம் பக்கம் பார்க்க)

## சென்னையில் பிரதமர்



சென்னை வந்த பிரதமரை ஆளுநர் பட்வாரி, முதல்வர் புரட்சித்தலைவர், நாஞ்சிலார், ஜோதி அம்மாள் ஆகியோர் மீனம்பாக்கம் விமான நிலையத்தில் வரவேற்றனர்.

## ஏழைகளை வாழ வைக்கும் திட்டங்கள்: புரட்சித் தலைவர் அரசுக்கு

# பிரதமர் பாராட்டு

சென்னை, செப். 21—ஏழை எளியவர்களை வாழவைப்பதில் மத்திய அரசும், தமிழ்நாடு அரசும் ஒருமித்த கருத்துடன் செயல்படுவதாக பிரதமர் மொரார்ஜி தேசாய் கூறினர்.

ஏழைகளுக்கு வீடுகட்டித்தர தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் எடுத்துள்ள நடவடிக்கைகளையும் பிரதமர் பாராட்டினார்.

சென்னை ராஜா அண்ணாமலைபுரத்தில் தமிழ்நாடு வீட்டுவசதி வாரியத்தினால் கட்டப்பட்டுள்ள காவலர் குடியிருப்புக்களை முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் பிரதமர் மொரார்ஜி தேசாய் திறந்து வைத்தார்:

தொழிலாளர் நல வீட்டு வசதி அமைச்சர் ராகவானந்தம் வரவேற்றுப் பேசினார் சென்னை நகர காவல் துறை ஆணையாளர் பி. பரமகுரு: ராகவானந்தத்துக்கும் தமிழக வீட்டுவசதி வாரியத்தலைவர் சி. வி. எஸ். மணி முதல்வர் புரட்சித் தலைவருக்கும் தமிழக காவல் துறை தலைமை அதிகாரி ஸ்ரீபால் பிரதமர் மொரார்ஜி தேசாய்க்கும் ஆளுயர ரோஜா மாலைகளை அணிவித்தனர்.

தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலுடன் விழா தொடங்கியது: மொரார்ஜி தேசாய் பட்டனை அழுத்தி பெயர்ப்பலகையைத் திறந்து வைத்தார் நாதசுர இசை முழங்கியது.

பிரதமர் மொரார்ஜி தேசாய் பேசியதாவது:

"நல்லதொரு விழாவில் கலந்து கொள்ள வாய்ப்புத் தந்த தமிழக அரசுக்கும், வீட்டுவசதி வாரியத்துக்கும் அன்பு கலந்த நன்றியினை தெரிவித்துக் கொள்கிறேன்:

ஏழை நடுத்தர மக்களுக்கு வீட்டுவசதி செய்து தருவதில் தமிழக வீட்டு வசதி வாரியத்தின் பணி பெரிதும் பாராட்டுக்குரியது.

நாட்டு மக்களுக்கு சேவைசெய்வதிலும் பாதுகாப்பு தருவதிலும் காவல் துறையின் பணி மிகவும் இன்றியமையாதது குறிப்பிடத் தக்கது ஆகும். இப்போது தங்களது பொறுப்பையும் பணியையும் ஜனநாயகத்தின் தேவையையும் காவல் துறையினர் மிகவும் நன்குணர்ந்திருக்கிறார்கள்.

அரசு நிர்வாக இயந்திரம் சரிவர ஒழுங்காகச் செயல்பட்டால்தான் மக்களின் தேவைகளை நிறைவேற்ற முடியும். சமூக விரோதிகளை ஒழிக்க வேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு இல்லை. இதுவிஷயத்தில் காவல் துறையினரின் சிரமங்களை அனைவரும் உணரவேண்டும்.

காவல் துறையைச் சேர்ந்தவர்களையோ காவலரையோ கண்டு எந்த ஒரு குடிமகனும் பயந்து நடுங்கும் நிலை தோன்றக்கூடாது. அப்படி ஒரு நிலை இருக்குமானால் மனிதன் தன்னம்பிக்கையை இழந்துவிடுவான்.

இங்கே பேசிய முதல்வர் தனது அரசு காந்தி வழியில் ஏழை எளிய பிற்படுத்தப்பட்ட மக்களை வாழ வைக்கும் என்று கூறினார். மத்திய அரசும் காந்தீய வழியிலே தான் செயல்படுகிறது.

மத்தியிலும் மாநிலத்திலும் வெவ்வேறு கட்சிகள் ஆட்சியில் இருந்தாலும் ஏழைகளை பின்தங்கிய மக்களை வாழவைக்க வேண்டும்

(2-ம் பக்கம் பார்க்க)



பொதுக்குழுவில் கலந்துகொண்ட கழக முன்னணியினர் ஆர்வத்துடன் நிகழ்ச்சிகளில் பங்கேற்கின்றனர்.

இலங்கை வாழ் தமிழர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதி:

# கழகப் பொதுக்குழு அதிர்ச்சி-வேதனை

**சென்னை, செப். 21— இலங்கை வாழ் தமிழர்களுக்கு சமீபத்தில் இழைக்கப்பட்ட கொடுமைகளைக் கண்டித்து கழகப் பொதுக்குழு தீர்மானம் நிறைவேற்றியது.**

**இலங்கைத் தமிழர்களின் துயர் துடைக்க இந்தியப் பிரதமர் தேசாய் எடுத்த உடனடி நடவடிக்கைகளுக்காகப் பொதுக்குழு பாராட்டுத் தெரிவித்தது.**

இந்தத் தீர்மானத்தை ஏ.பி. ஜனார்த்தனம் எம்.பி. முன்மொழிய சி.என். விசுவநாதன் எம்.பி., ஏ.சி. தேவர், நல்லுச்சாமி டி. ராஜா ஆகியோர் வழிமொழிந்தனர்.

தீர்மான விவரம் வருமாறு:

சமீபத்தில் ஸ்ரீலங்காவில் வாழ்கின்ற தமிழர்கள் மீது, குறிப்பாக இந்திய வம்சாவழியினர் மீது, பயங்கரமான தாக்குதல் நடத்தப்பட்டு, அதனால் நூற்றுக்கணக்கான தமிழ் மக்கள் உயிர் துறக்கவும், ஆயிரக்கணக்கான தமிழ் மக்கள் கொடுமைகளைச் சந்திக்கவும் தங்கள் உடைமைகளை இழந்து சொல்லொணா துயர்நிலை ஏற்பட்டதைக் கேட்டு இப்பொதுக்குழு அதிர்ச்சி அடைகிறது.

இத்தகைய கொடுமைகளைத் தடுக்க இலங்கை அரசோடு தொடர்புகொண்டு உடனடியாக முயற்சிகள் மேற்கொண்ட இந்திய அரசையும், இந்தியப் பிரதமர் மொரார்ஜி தேசாய் அவர்களையும் இப்பொதுக்குழு பாராட்டுவதோடு இதுபோன்ற கொடுமைகளுக்கு இனிமேலும் தமிழ்மக்கள் ஆளாகாமல் பார்த்துக் கொள்ள வேண்டுமெனவும், இந்த வன்முறையில் ஈடுபட்டவர்கள் கடுமையான தண்டனை அடையவும் பாதிக்கப்பட்ட, உடைமைகளை இழந்த, இலங்கை வாழ் தமிழ் மக்களுக்குப் போதிய இழப்பீடுகள் வழங்க வேண்டுமெனவும், ஸ்ரீலங்கா அரசை வற்புறுத்தி இலங்கைவாழ் தமிழ் மக்களுக்கு பாதுகாப்பையும், நம்பிக்கையையும் ஏற்படுத்தும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட வேண்டுமென இந்தியப் பேரரசை இப்பொதுக்குழு கேட்டுக் கொள்கிறது.

இவ்வாறு தீர்மானத்தில் கூறப்பட்டுள்ளது.

மதுவிலக்குபற்றி ஒரு தீர்மானத்தை க. அறிவழகன் கொண்டுவர கோவைத்தம்பி, பண்ணை சேதுராம், ஜெ. பாலன் ஆகியோர் வழிமொழிந்தனர்.

தீர்மான விவரம் வருமாறு:

உத்தமர் காந்தியடிகளும், தென்னாட்டுக் காந்தியாம் பேரறிஞர் அண்ணா அவர்களும், தங்களுடைய தலைசிறந்த இலட்சியமாக கொண்டிருந்த மதுவிலக்கு கொள்கையை தொடர்ந்து உறுதியாக நடைமுறைப்படுத்துவது என்ற கருத்தை மாண்புமிகு முதலமைச்சர் வெளியிட்டுள்ளதற்கு இப்பொதுக்குழு தனது பாராட்டையும் பூரண ஆதரவையும் தெரிவித்துக் கொள்வதோடு மதுவிலக்கை அமல்படுத்துவதில் மாநில அரசுக்கு ஏற்படும் இழப்புத் தொகை சுமார் ரூ. 130 கோடியை மத்திய அரசிடமிருந்து பெற்று அதன் மூலம் தமிழக மக்களின் நல்வாழ்வுத் திட்டங்களை நிறைவேற்ற வேண்டுமென தமிழக அரசை இப்பொதுக்குழு கேட்டுக் கொள்கிறது.

## கிருஷ்ணா நீர்

சென்னைக்கு குடிநீர் வழங்குவது பற்றிய தீர்மானம் வருமாறு:

சென்னைக்கு குடிநீர் வழங்கும் நீண்டகாலத் திட்டமான கிருஷ்ணா நதி நீரைக்கொண்டு வருவதற்கான முயற்சியில் ஈடுபட வேண்டுமென மத்திய அரசை தமிழக அரசு வற்புறுத்த வேண்டுமென்று இப்பொதுக்குழு கேட்டுக் கொள்கிறது.

மேற்கண்ட தீர்மானத்தை டாக்டர் ஹண்டே முன்மொழிய சத்தியவாணிமுத்து, ராமகிருஷ்ண பாபு, ராஜ்குமார், சைதை துரைசாமி, சி.வி. அன்புத்தம்பி ஆகியோர் வழிமொழிந்தனர்.

## வீணாகும் நதி நீர்

கழகப் பொதுக்குழு நிறைவேற்றிய தீர்மானம் வருமாறு:—

மேற்கு தொடர்ச்சிமலைகளில் உற்பத்தியாகி, கேரள மாநிலத்தின் வழியாக அரபிக் கடலிலே கலக்கும் ஆறுகளின் உபரி நீரை தமிழகத்திற்கு பயன்படும் முறையில் திருப்பி விடுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு மத்திய அரசையும் கேரள மாநில அரசையும் இப்பொதுக்குழு கேட்டுக்கொள்கிறது.

இத்தீர்மானத்தை யு. ஆர். கிருஷ்ணன் முன்மொழிய எம். எஸ். ரஹிமான் திருச்சி கே. பெருமாள், கம்பம் சாகுல் அமீது, கோ. பா. அமிர்தலிங்கம் ஆகியோர் வழிமொழிந்தனர்.

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

தலைமையில் இயங்கும் இந்த இயக்கத்தின் அவைத்தலைவராக அவர் பொறுப்பேற்க வேண்டும் எனும் தீர்மானத்தை நான் முன்மொழிகின்றேன்.

## வானொலி அலுவலகம்

அனைத்திந்திய வானொலிப் பிரிவின் தெற்கு மண்டலப் பொறியாளர் அலுவலகத்தை டெல்லிக்கு மாற்றுவதை எதிர்த்துப் பொதுக்குழு தீர்மானம் நிறைவேற்றியது.

இத்தீர்மானத்தை புலமைப்பித்தன் முன்மொழிய, பட்டுக்கோட்டை அழகிரிசாமி, கருணாமூர்த்தி, அரக்கோணம் நெடுஞ்சேரலாதன் ஆகியோர் வழிமொழிந்தனர்.

சென்னையில் இயங்கி வரும், அனைத்திந்திய வானொலிப் பிரிவின் தெற்கு மண்டலப் பொறியாளர் அலுவலகத்தை, 1-10-77 முதல், புது டெல்லிக்குமாற்றுவதென கடந்த 76 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் மத்திய அரசு முடிவெடுத்துள்ளது.

தென்னகத்திலுள்ள 22 வானொலி நிலையங்களின் பொறுப்புவாய்ந்த இந்த அலுவலகம் சென்னையிலேயே இருப்பது தான் நியாயமாகும், வசதியாகவும் இருக்கும். எனவே முந்திய அரசு எடுத்த அந்த முறையற்ற முடிவை ரத்து செய்து சென்னையிலே தொற்கு மண்டலப் பொறியாளர் அலுவலகத்தை தொடர்ந்து பணியாற்ற அனுமதிக்குமாறு இப்பொதுக்குழு மத்திய அரசை வற்புறுத்திக்கேட்டுக் கொள்கிறது.

இவ்வாறு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

னர்.

ஜனதாக் கட்சியைச் சேர்ந்த இரா. செழியன் கழக மேலவை உறுப்பினர் அறிவழகன் ஆகியோரும் பிரதமரை வரவேற்றனர்.

மேலவைத் துணைத்தலைவர் ம. பொ. சி, சட்டப் பேரவை துணைசபாநாயகர் திருநாவுக்கரசு வெளி நாட்டுத் தூதுவ அதிகாரிகள் ஆகியோரும் பிரதமரை வரவேற்க வந்திருந்தனர்.

விமான நிலையத்தில் பிரதமருடன் முதல்வர் புரட்சித்தலைவர் சிறிது நேரம் பேசிக் கொண்டு இருந்தார்.

கழகப் பொதுக்குழுவில் நாவலர் உரையாற்றுகிறார்.

போராட்ட நேரத்தில் கழக அரசின் அணுகு முறை:

# புரட்சித்தலைவருக்கு கழகப் பொதுக்குழு நன்றியும் பாராட்டும்

**சென்னை, செப். 21- போக்குவரத்துத் தொழிலாளர் வேலை நிறுத்தம், விவசாயிகள் கிளர்ச்சி, மாணவர்கள் போராட்டம் ஆகியவற்றில் புதிய அணுகு முறையைக் கையாண்ட தமிழக அரசிற்கும், முதல்வர் புரட்சித்தலைவருக்கும் கழகப் பொதுக்குழு நன்றியும் பாராட்டும் தெரிவித்து உள்ளது.**

இது குறித்த தீர்மானத்தை வழக்கறிஞர் ராமபத்திரன் முன்மொழிய, இரா. கரிகாலன் கே. எஸ். சந்தானம், ராசன், செல்லப்பா, பன்னீர்செல்வம், கோவை அண்ணா நம்பி ஆகியோர் வழிமொழிந்தனர்.

தீர்மான விவரம் வருமாறு:

அரசு அமைந்து 75 நாட்கள் கூட ஆகாத நிலையில் மக்களின் பல்வேறு பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிற நேரத்தில் எதிர்பாராமல் எழுந்த பல்லவன் போக்குவரத்து தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் மாணவர்களுடைய கிளர்ச்சிகள் விவசாயிகளுடைய கிளர்ச்சிகள் ஆகியவைகளை நிதானமாகவும், உறுதியோடும் சந்தித்து, சட்டம் ஒழுங்கை நிலை நிறுத்துவது என்ற முறையில் மட்டும் அணுகாமல், போராட்டங்களில், கிளர்ச்சிகளில் ஈடுபட்டவர்களின் பிரச்சினைகளை உணர்வு பூர்வமாக மதித்து புதிய அணுகுமுறையைக் கையாண்டு இப்படிப்பட்ட கிளர்ச்சிகளின் மூலம் பொது மக்களுக்கும், கிளர்ச்சி நடத்துகிறவர்களுக்கும் தொல்லைகள் ஏற்படாமல் கிளர்ச்சியைத் தடுத்து நிறுத்திய தமிழக அரசிற்கும் குறிப்பாக மாண்புமிகு முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களுக்கும் இப்பொதுக்குழு தனது பாராட்டுதல்களையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறது.

## வாக்காளருக்கு நன்றி

வாக்காளர்களுக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை எச். ஜி. ஆறுமுகம் முன்மொழிய இரா. மோகனரங்கம் வழிமொழிந்தார்.

நடைபெற்று முடிந்த நாடாளுமன்றத் தேர்தலிலும், சட்டமன்றத் தேர்தலிலும், அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும், அதனுடைய தோழமைக் கட்சிகளுக்கும் மிகப் பெரும் அளவிற்கு வாக்களித்து மகத்தான வெற்றியை ஈட்டித் தந்து தமிழகத்திலும் புதுவை மாநிலத்திலும் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் "அண்ணாவின் அரசு" அமைவதற்கு உதவிய வாக்காளப் பெருமக்களுக்கு இப்பொதுக்குழு தனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

இந்த மகத்தான வெற்றியை, அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகமும் அதன் தோழமைக் கட்சிகளும் அடைய இரவு பகல் பாராமல் கடுமையான சுற்றுப்பயணங்கள் மேற்கொண்டு, தமிழகத்திலும், புதுவை மாநிலத்திலும் மக்களின் பேராதரவைத் தேடித் தந்த பொதுச் செயலாளர் புரட்சித்தலைவர் அவர்களுக்கு இப்பொதுக்குழு நன்றியை தெரிவித்துக்கொள்கிறது.

அரசு விழா எடுக்கமுடிவு செய்ததற்கு நன்றி தெரிவித்த தீர்மானம் வருமாறு:

நாட்டு மக்களுக்காக தங்களுடைய வாழ்வை ஒப்படைத்து, நாட்டு மக்களின் இதயங்களிலே நீங்காத இடம் பெற்று, மறைந்தும் மறையாது வாழ்கின்ற மக்கள் தலைவர்களுக்கு அரசின் சார்பிலே மரியாதை காட்டப்பட வேண்டும் என்ற அடிப்படையில், பேரறிஞர் அண்ணா அவர்களின் பிறந்த நாள் விழாவையும், தேசிய மகாகவி பாரதியார் பிறந்த நாள் விழாவையும், மிகச்சிறப்பான முறையில் கொண்டாடியிருப்பதோடு, மேலும் தந்தை பெரியார் ஈ.வெ.ரா. மூதறிஞர் ராஜாஜி, தலைவர் காமராஜ் ஆகியோர்களின் பிறந்த நாள் விழாக்களையும் தேசிய விழாவாக அரசு கொண்டாடும் என்று அறிவித்திருக்கிற தமிழக அரசையும் முதல்வர் மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்களையும் இப்பொதுக்குழு பாராட்டுவதோடு நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறது.

இத்தீர்மானத்தை மதுரை முத்தையா முன்மொழிய பு. கோ. கிட்டு வழிமொழிந்தார்.

## மொரார்ஜி பேட்டி

சென்னை, செப். 21— சென்னை வந்த பிரதமர் மொரார்ஜி தேசாய் விமான நிலையத்தில் நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார்.

பழைய காங்கிரஸ் கட்சி மீண்டும் துவக்கப்போவதாக எஸ். கே. பாட்டீல் அறிவித்திருப்பது பற்றி பிரதமரிடம் நிருபர்கள் கேட்டபோது "இப்போது அது பற்றி எதுவும் சொல்வதற்கில்லை" என்றார்.

மற்றொரு கேள்விக்குப் பதிலளிக்கையில் நந்தினி சத்பதி விவகாரம் சம்பந்தப்பட்ட குறிப்புகள் தமக்கு அனுப்பப்பட்டிருப்பதாகவும் அதுபற்றி பரிசீலித்து வருவதாகவும் பிரதமர் குறிப்பிட்டார்.

"நந்தினி சத்பதி ஜனதாக் கட்சியின் நிர்வாகக் கமிட்டி உறுப்பினராக உள்ளார், அப்படிப்பட்டவர் மீது உங்களைக் கேட்காமல் எப்படி நடவடிக்கை எடுத்தார்கள்" என்று நிருபர்கள் கேட்டனர்.

அது மாநில அரசு சம்பந்தப்பட்ட விஷயம், மாநில அரசு நடவடிக்கை எடுத்திருக்கிறது என்றார் பிரதமர் மொரார்ஜி.

துணைப் பொதுச் செயலாளர் நாஞ்சிலார் முன்மொழிய

# நடமாடும் பல்கலைக் கழகமாம் நாவலர் அவைத்தலைவர் ஆனார்

**சென்னை, செப் 21— நடமாடும் பல்கலைக் கழகம் என்று பேரறிஞர் பெருந்தகை அண்ணா அவர்களால் அழைக்கப்பட்ட நாவலர் நெடுஞ்செழியன் கழக அவைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.**

அவைத்தலைவராக நாவலரைப் பொறுப்பேற்கப் பணிக்கும் தீர்மானத்தைத் துணைப் பொதுச் செயலாளர் நாஞ்சிலார் முன்மொழிய, அமைப்பு செயலாளர் கே. ஏ. கே. கொள்கை பரப்புச்செயலாளர் எஸ். டி. எஸ் ஆகியோர் வழிமொழிந்தனர்.

தீர்மான விவரம் வருமாறு:

அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம், அண்ணா அவர்களின் கொள்கை கோட்பாடுகளை காப்பாற்றுவதற்காக புரட்சித் தலைவர் அவர்களால் காலத்தின் கட்டாயம் காரணமாக ஆரம்பிக்கப்பட்ட மக்கள் இயக்கமாகும். பொதுவாழ்வில் அரசியல்வாழ்வில் லஞ்ச ஊழலுக்கு எக்காரணத்தாலும் இருக்கக் கூடாது என்ற ஒழுகப் புரட்சியை புரட்சித் தலைவர் ஆரம்பித்தார். அண்ணாவின் இலட்சிய தீபத்தை கையிலே ஏந்தி லட்சோப லட்சம் தொண்டர்களின் துணையோடு சமுதாயத்தின் இருண்ட பகுதிகளை அந்தப் பகுதிகளில் தங்களைப் பத்திரப்படுத்திக் பதுங்கிக்கொண்டவர்களை அனைத்திந்திய அண்ணா தி.மு.க. அடையாளம் காட்டியது.

அரசியல் போராட்டக் களம் எனும் நாணயத்தின் இரண்டு பகுதிகளில் ஒன்று தாக்குதல் மற்றொன்று தாங்குதல்.

தாக்குதல்களையும், தாங்குதல்களையும் ஏற்று கட்சிகள் பணியாற்றின.

அப்படிப்பட்ட காரியங்களில் ஈடுபட்டவர்களில் இதயத் தூய்மையோடு அமரர் அண்ணா அவர்களின் இலட்சியங்களை இதயங்களில் ஏற்றுக்கொண்டு ஆடம்பரமின்றி அடக்கமாக ஜனநாயக முறையில் தங்களை வழிநடத்திச் சென்று ஆனால் அதேநேரத்தில் நம்மை எதிர்த்தவர்களும் இருந்தனர்.

அவர்கள் கருணாநிதியின் சர்வாதிகாரப் போக்கைத் தாங்கிக் கொள்ள முடியாமல் இறுதியில் தங்களை தி.மு.க.விலிருந்து விலக்கிக்கொண்டு நாவலர் நெடுஞ்செழியன் அவர்களின் தலைமையில் மக்கள் தி.மு.க. எனும் அமைப்பினை உருவாக்கி இறுதியில் அண்ணாவின் லட்சியங்களைக் காக்கின்ற ஒரே கட்சி அனைத்திந்திய அண்ணா தி.மு.க தான் என மனமார ஏற்றுக் கொண்டு, புரட்சித்தலைவரின் தலைமையை ஏற்று நம்மோடு இணைந்துள்ளனர்.

சேர வேண்டியவர்கள், சேரவேண்டிய நேரத்தில் சேர வேண்டிய இடத்தில் சேர்ந்திருக்கிறார்கள்.

புரட்சித் தலைவரின் அன்பும் பாசமும் பெறுப கொண்ட நாவலர் அண்ணா அவர்களால் நடமாடும் பல்கலைக் கழகம் என அழைக்கப்பட்டவர்.

புரட்சித் தலைவரின

(1-ம் பக்கம் பார்க்க)

# பிரதமர் பாராட்டு...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

என்ற குறிக்கோளில் கருத்து வேறுபாடும் முரண்பாடும் கிடையாது.

காவல் துறையினர் பொதுமக்களிடம் அன்புடன் நண்பர்களாகச் செயல்பட வேண்டும். சமூக விரோதச் சக்திகளை தடுக்கும் காவல்துறையினர்— சட்டத்தை பேணிக் காக்கும் சாதாரண குடிமகனுக்குத் தகுந்த பாதுகாப்பு தரவேண்டும். குற்றவாளியாக இருந்தாலும் சித்திரவதை செய்வதோ இழிவுபடுத்துவதோ கூடவே கூடாது.

## அவர்கள் மானஸ்தர்கள்

நிர்வாகத்தில் ஊழலைக் களையவேண்டும் என்று சொல்லும்போது ஜப்பான் என் நினைவுக்கு வருகிறது. ஜப்பானில் நிர்வாகத்தில் தலைமைப்பொறுப்பில் இருப்பவர்கள் யாராவது தவறு செய்து விட்டோம் என்பதை உணர்ந்தால் அவர்கள் உடனே தற்கொலை செய்து கொண்டு விடுகிறார்கள். இங்கே நான் அப்படி செய்ய வேண்டும் என்று கூற வல்லை. (சிரிப்பு)

இப்போதுதான் மத்தியிலும் மாநிலங்களிலும் திட்டங்கள் தீட்டப்பட்டு செயல்படத் தொடங்கியுள்ளன.

அவை நிறைவேறவும் பயன்தரவும் கொஞ்ச கால அவகாசம் தேவைப்படுகிறது கட்டிடம் கட்டும்போது அஸ்திவாரம் பலமாக இருந்தால்தான் கட்டிடம் நிலையாக இருக்கும். அரசின் திட்டங்களுக்கு நிர்வாக அதிகாரிகளும், பொது மக்களும் பூரண ஒத்துழைப்புத் தர வேண்டும். முதல்வர் தலைமையில் தமிழகம் சிறிய முன்னேற்றங்களை காணும் என்று நம்பி வாழ்த்துகிறேன்.

இவ்வாறு பிரதமர் மொரார்ஜி தேசாய் கூறினார்.

## முதல்வர்

விழாவுக்குத் தலைமை தாங்கிய முதல்வர் புரட்சித் தலைவர் கூறியதாவது:

காந்திய தத்துவப்படி ஏழை மக்களை வாழவைப்பதற்காக பாடுபடும் நல்ல எண்ணம் கொண்ட பிரதமரைப் பாராட்டி வாழ்த்தி வரவேற்கிறேன். இந்திய ஒருமைப்பாட்டு உணர்வோடு தொண்டு செய்து நல்ல திட்டங்களை நிறைவேற்றுவோம்.

காந்தியடிகள், அண்ணா வழியில் செயல்படுத்தப் படுகிற திட்டங்கள் கிராம மக்களுக்கு பயன்படும் வகையில் உழைக்கும் மக்களுக்கு வாய்ப்பும் உத்திரவாதம் தருகிற வகையில் அமையும். காலஞ்சென்ற கிளப்வாலா அம்மையார் இந்த இடத்தை காவல் துறையினருக்கு வீடுகட்டுவதற்கு அனுமதி தந்ததற்காக பாராட்டுகிறேன்.

தியாகங்கள் நிறைந்த செயல்தான் நாட்டை உயர்த்துகிறது எனவே எல்லோரும் நாட்டுப்பற்றுடன் எந்த ஒரு தொழிலிலும் அலட்சியம் செய்யாமல் உழைக்க வேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

தமிழக காவல் துறை தலைமை அதிகாரி ஸ்டிரேசி நன்றி கூறினார்.

விழாவில் மத்திய அமைச்சர் பி. ராமச்சந்திரன் தொழில் அதிபர் வி.ஜி. பன்னீர்தாஸ் மற்றும் பலர் பங்கேற்றனர்.

## கருணாநிதி சிலை..

(1ம் பக்கத்தொடர்ச்சி)

முதல் கட்டமாக சென்னை அண்ணா சாலையில் உள்ள கருணாநிதி சிலையை அகற்றக் கோரியும் வீட்டுவசதி வாரியக் கட்டிடத்தின் பெயர் "கருணாநிதி மாளிகை" என்று இருப்பதை மாற்றி "அண்ணா மாளிகை" என்று வைக்கக் கோரியும் அக்டோபர் மாதம் பெரும் போராட்டம் ஒன்றை மதுரைமுத்து தலைமையில் நடத்த அனுமதிக்குமாறு பொதுச் செயலாளரை அனுமதி கோரும் தீர்மானம் இந்த அவசர ஆலோசனைக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டதாக ஜேப்பியார் கூறினார்.

இப் போராட்டத்தில் பல்லாயிரக்கணக்கான வீரர்கள் கலந்துகொள்வார்கள் என்றும் ஜேப்பியார் கூறினார்.

## சென்னையில் மொரார்ஜி: முதல்வர் வரவேற்றார்

சென்னை, செப் 21— தமிழக நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள வந்துள்ள பிரதமர் மொரார்ஜி தேசாயை கவர்னர் பட்வாரியும் முதல்வர் புரட்சித் தலைவரும் வரவேற்றனர்.

புரட்சித்தலைவர், பிரதமர் மொரார்ஜிக்கு ஆள் உயர மாலை அணிவித்து வரவேற்றார்.

இன்று காலை 9-40 மணிக்கு பயணிகள் விமானத்தில் பிரதமர் மொரார்ஜி வந்தார்.

அவருடன் மத்திய மின்சாரத்துறை அமைச்சர் பி. ராமச்சந்திரனும் வந்தார்.

பிரதமர் வந்த விமானம் அருகே சென்று கவர்னர் பட்வாரி, முதல்வர் புரட்சித்தலைவர், கேரள கவர்னர் ஜோதி அம்மாள் கழக நாடாளுமன்ற குழுத்தலைவர் எஸ். டி. எஸ், நிதி அமைச்சர் நாஞ்சிலார், அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் ஆகியோர் பிரதமரை வரவேற்றனர்.

அமைச்சர்கள் நாஞ்சிலார், பண்ருட்டி ராமச்சந்திரன், ஆர். எம். வீ. எஸ். ராகவானந்தம், சவுந்தரபாண்டியன், பி. டி. எஸ் குழந்தைவேலு ராசா முகமது ஆகியோர் மாலை அணிவித்தனர்.

நாடாளுமன்ற உறுப்பினர்கள் மோகனரங்கம் சி. என். விசுவநாதன், ஜனதாக் கட்சியைச் சேர்ந்த குமரி அனந்தன், தண்டாயுதபாணி ஆகியோரும் வரவேற்ற

(2-ம் பக்கம் பார்க்க)

சென்னை சட்டக் கல்லூரி

## தமிழ் பேரவை: கழக மாணவர் வெற்றி

சென்னை, செப். 21— சென்னை சட்டக்கல்லூரி தமிழ் பேரவைத் தேர்தலில் கழக மாணவர்கள் வெற்றி பெற்றுள்ளனர்.

சட்டக் கல்லூரியில் உள்ள தமிழ்ப் பேரவைக்குத் தேர்தல் நடைபெற்றது. தேர்தலில் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழக மாணவர் எம். எம். ரவீந்திரன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சட்டக் கல்லூரி இரண்டாம் ஆண்டு தமிழ்ப் பேரவை வகுப்புபிரதிநிதியாக கழக மாணவர் ஆர். சீனிவாசன் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

---

நாட்குறிப்பு
21—9—1977
சேத்துப்பட்டு
(அப்பேதகார் திடல்)
மாலை 6 மணி
பொதுக்கூட்டம்
பங்கு பெறுவோர்
மதுரைமுத்து எம்.எல்.சி.,
ஜேப்பியார்,
எம். எஸ். அப்துல்காதர் எம். பி.
சிவி: அன்புதம்பி, தமிழ்மணி, ஜெயகே பி, நெல்லை குமார், குகன், குணாளா, திருநாவுக்கரசு, மா. சுமணி மற்றும் பலர்.

---

கழக அமைச்சரவை

# விஸ்தரிப்பு உண்டா?

## புரட்சித்தலைவர் பேட்டி

சென்னை, செப். 21—கழக அமைச்சரவை விஸ்தரிப்பு இருக்கலாம். அது எப்போது இருக்கும்? எத்தனை பேர் இருப்பார்கள் என்பது பற்றி கழகப் பொதுக்குழு முடிவு எடுக்கும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் நிருபர்களிடம் கூறினார்.

கழகப் பொதுக்குழு முடிந்த பிறகு முதல்வர் புரட்சித் தலைவர் நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார்.

அப்போது புரட்சித்தலைவருடன் எஸ்.டி.எஸ்., கே.ஏ.கே., நாவலர் நெடுஞ்செழியன் ஆகியோரும் இருந்தனர்.

அப்போது நிருபர்கள் கேட்ட கேள்விகளும், புரட்சித்தலைவர் அளித்த பதில்களின் விவரமும் வருமாறு:

நிருபர்: கோவைச் செழியன் கழகத்திற்கு வந்துள்ளாரே, அவர் அவரது கட்சியைக் கலைத்து விட்டு வந்துள்ளாரா?

புரட்சித்தலைவர்:— அவருடைய கட்சியைக் கலைத்து விட்டு வந்திருக்கிறார். அந்தக் கட்சியைச்சேர்ந்த மற்றவர்கள் பிறகு வருவார்கள்.

நிருபர்:— வேறு ஒன்று இரண்டு கட்சிகளும் கழகத்தில் இணையும் என்று பெரியார் சிலை திறப்பு விழாவில் கூறி இருக்கிறீர்களே?

புரட்சித்தலைவர்:— இப்போது வந்துள்ளவைகள் இரண்டு கட்சிகள் ஆகவில்லையா?

நிருபர்:— தங்கராசு தலைமையில் உள்ள திராவிடர் கழகமும் இணையும் என்று சொல்லப் படுகிறதே?

புரட்சித்தலைவர்:— இதுவரை அந்தப் பேச்சு வரவில்லை. அவர்களுக்கு என்று நல்ல அமைப்பை வைத்திருக்கிறார்கள்.

### அமைச்சரவை விஸ்தரிப்பா?

கேள்வி:— கழக அமைச்சரவை விஸ்தரிப்பு உண்டா?

புரட்சித்தலைவர்:— அமைச்சரவையை விஸ்தரிக்க வேண்டும் என்று என்னுகிறீர்களா?

நிருபர்: விஸ்தரிக்க வேண்டும்.

புரட்சித்தலைவர்: வேண்டும் போது பொதுக்குழு கூடி முடிவு எடுக்கும்.

நிருபர்: அமைச்சரவை விஸ்தரிக்கப்படலாம் என்று நீங்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றபோது சொல்லி இருக்கிறீர்களே?

புரட்சித்தலைவர்: விஸ்தரிப்பு இருக்கலாம் என்று தான் சொல்லி இருக்கிறேன்.

நிருபர்: 'May' என்பதற்கு 'Shall' என்ற பொருள் உண்டல்லவா?

புரட்சித்தலைவர் அப்படி பொருள் இருந்தால் அண்ணா அவர்களும் ராஜாஜி அவர்களும் அதற்கு அவ்வளவு வாதாட வேண்டி இருந்து இராது!

நிருபர்: விஸ்தரிப்பு எப்போது இருக்கும்?

புரட்சித்தலைவர்: எப்போது எவ்வளவு பேர் என்பதை இப்போது சொல்ல இயலாது.

கேள்வி:— மக்கள் தி.மு. கழகம் கழகத்துடன் இணைந்துள்ளது. அதில் இருந்த இரண்டு மூன்று பேர் மீது குற்றச்சாட்டுக்கள் இருக்கின்றனவே? அது பற்றி விசாரணை நடத்தப்படுமா?

புரட்சித்தலைவர்: குற்றச்சாட்டுகள் நிரூபிக்கப்பட்டால் வேறு நிலையில் இருக்கலாம்.

கேள்வி: அவர்களாக விசாரணைக்கு உட்பட வேண்டுமா?

புரட்சித் தலைவர்: இது பற்றி கழகம் தெளிவாக சொல்லி இருக்கிறது.

உடன் இருந்த நெடுஞ்செழியன் (குறுக்கிட்டு): குற்றச்சாட்டு ஆதாரப் பூர்வமாக நிரூபிக்கப்பட்டால் விசாரணை நடத்தப்படும் என்று தீர்மானத்தில் தெளிவாகக் குறிப்பிடப் பட்டுள்ளது.

### மேலவை மூன்று இட நியமனம் எப்போது?

நிருபர்: மேலவைக்கு மூன்று உறுப்பினர்கள் இன்னும் நியமனம் செய்யப்படாமல் இருக்கிறதே. அந்த இடங்களுக்கு நியமனங்கள் எப்போது இருக்கும்?

புரட்சித் தலைவர்: அந்த இடங்களுக்கு கவர்னர் தான் நியமனம் செய்ய வேண்டும்.

நிருபர்:— அந்த நியமனங்கள் எப்போது இருக்கும்?

புரட்சித்தலைவர்: விரைவில் இருக்கும்.

### அண்ணா சிலை வவகாரம்

நிருபர்: சைதாப்பேட்டை மறைமலை அடிகள் பாலம் அருகே அண்ணா சிலை வைக்க தி.மு.கழகம் அனுமதி கேட்டுள்ளதே?

புரட்சித் தலைவர்:— அவர்கள் கேட்கும் அந்த இடம் ஏற்கனவே காமராஜர் சிலை வைக்க காங்கிரஸ்காரர்கள் கேட்டு அரசால் அனுமதி மறுக்கப்பட்ட இடமாகும் இப்போது அந்தப் பிரச்சினைக்கு உரிய இடத்தில் அண்ணா சிலை வைக்க வேண்டும் என்று சொல்கிறார்கள்.

பிரச்சினை உருவான இடங்களையே தேடி எடுக்கிறார்கள். நாங்கள் எந்தப் பக்கமும் சலுகை காட்ட முடியாது. அந்த இடத்தில் இரண்டு சிலைகள் வைக்க முடியாது.

### யார் விட்டுக் கொடுப்பது

அதிலும் அவர்கள் சாலையின் நடுவே வைக்க இடம் கேட்டு இருக்கிறார்கள்.

அப்படி நடுவில் வைக்க அனுமதிப்பது இயலாது. இரண்டு கட்சியினரும் பேசி ஏதாவது ஒரு மூலையில் சிலைவைக்க சம்மதித்தால் அனுமதிக்கலாம். யாராவது ஒருவர் விட்டுக் கொடுக்க வேண்டும்.

காங்கிரஸ்காரர்கள் விட்டுக்கொடுத்தால் இவர்கள் வைக்கலாம் அப்போது சாலை நடுவில் வைக்க முடியாது.

நடுவில் வைத்தால் போக்குவரத்து நெரிசல் ஏற்படும். இந்தப்பக்கம் 30 அடி அந்தப் பக்கம் 30 அடி இருக்கிறது. நடுவில் போக்குவரத்துக் காவலர் நின்று ஒழுங்கு படுத்துகிறார். சிலையை அங்கு வைத்தால் அதுசிறப்பாக இராது.

நிருபர்:—அந்த இடத்திற்கு தி.மு.கவினர் அனுமதி கேட்டுள்ளனரா?

புரட்சித்தலைவர்:— மனு கொடுத்து இருக்கலாம் பிரச்சினைக்குரிய இடத்தை கேட்கிறார்கள்.

அண்ணா சிலையையோ, காமராஜர் சிலையையோ வைக்க நாங்கள் எதிரி அல்ல.

ஏற்கனவே காமராஜ் சிலையை அங்கே வைப்பதற்கு எதிர்ப்பு தெரிவிக்கப் பட்டுள்ளது. அந்த இடத்தை இப்போது கேட்பது

(4-ம் பக்கம் பார்க்க)

---

## 'வேங்கை' வெளியீட்டு விழா: அமைச்சர்கள் பங்கேற்பு

சென்னை, செப். 21— வேங்கைமாதம் இருமுறை பத்திரிகை வெளியீட்டு விழா சென்னையில் நடந்தது. அமைச்சர்கள் காளிமுத்து, ராசா முகமது ஆகியோர் விழாவில் பங்கேற்றனர்.

சட்டமன்ற உறுப்பினர் முசிறிப்புத்தன் விழாவுக்கு தலைமை வகித்தார்.

இதழின் முதல்பிரதியை கே. ராஜாமுகமது முசிறிப்புத்தனிடம் வழங்கினார். உள்ளாட்சித் துறை அமைச்சர் காளிமுத்து, கவிஞர் வேழவேந்தன், கவிஞர் பொன்னடியான், டாக்டர்கள் கிருஷ்ணன், பஞ்சு அப்துல் காதர் எம். பி. நடிகை சுமித்ரா ஆகியோர் விழாவில் கலந்து கொண்டனர்.

பத்திரிகை ஆசிரியர் இக்பால் நன்றி கூறினார். தேசிய தொழில் கலை வட்டத்தின் சார்பில் விழா ஏற்பாடு செய்யப்பட்டது ஜெவிசதை-வசனம் எழுதி டைரக்ட் செய்த 'அவளைச் சுற்றி' என்ற நாடகமும் நடந்தது.

---

# ஆளாக்கிய ஆசான் அமரர் அண்ணாவிற்கு நாடெங்கும் விழாக்கள்

சென்னை, செப். 21— நமக்கு வழிகாட்டி தமிழர் வாழ்வில் ஒளியூட்டிய நல்ஆசான் அமரர் அண்ணாவிற்குப் புரட்சித்தலைவர் கட்டளைக்கிணங்க கழகத்து மறவர்கள் நாடெங்கும் விழா எடுத்தவண்ணம் இருக்கிறார்கள்.

நாடெங்கும் நடந்த விழா பற்றி செய்திகள் வந்த வண்ணம் இருக்கின்றன.

பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழாவினை அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகக் கிளைகள் எம். ஜி. ஆர். மன்றங்கள் சார்புமன்றங்கள், நாடு முழுவதும் சீரோடும்சிறப்போடும் கொண்டாடின ஏழைகளுக்கு உணவு அளித்தல் பள்ளிமாணவர்களுக்கு இலவசப்புத்தகம் பலகைகள் வழங்குதல், கழகக்கொடியேற்றுதல், கொள்கை விளக்கப் பொதுக் கூட்டங்கள் நடத்துதல், அண்ணாவின் திருவுருவப் படத்தினை அலங்கரித்தல், ஊர்வலம் செல்லுதல் போன்றவை ஆங்காங்கே நடைபெற்றன.

### சென்னை வ. உ. சி. நகர்

சென்னை தண்டையார் பேட்டை வ. உ. சி. நகர் பேரறிஞர் அண்ணா நற்பணி மன்றம் சார்பில் அண்ணா பிறந்தநாள் விழாவும், அன்னை சத்ய இரவுப் பள்ளி திறப்பு விழாவும் நடந்தது. எஸ். பி. சிவபெருமாள் தலைமை தாங்கினார்.

சட்டப்பேரவை உறுப்பினர் ஐசரிவேலன் கொடியேற்றி வைத்தார் 22-வது வட்ட அமைப்பாளர் சி. டி. சிவசங்கரன் ஏழைக் குழந்தைகளுக்கு உணவு வழங்கினார் வட சென்னை மாவட்ட எம்.ஜி ஆர் மன்ற செயலாளர் இ.மதுசூதனன், எஸ். பி. ராமலிங்கம் துரைபாண்டியன், முகவை ராஜாமுகம்மது, மு. கோவிந்தன் ஆகியோர் பேசினார்கள். டி. வேலாயுதம் நன்றி கூறினார்.

### வடபழனி

சென்னை 114 வது வட்டம் வடபழனியில் அண்ணா பிறந்தநாள் விழா வட்ட அமைப்பாளர் பி. ஏ. கணபதி தலைமையில் நடந்தது. பி. சி. கணேசன் கொடியேற்றி வைத்தார். சு. சண்முகம் இனிப்பு வழங்கினார். தங்கசிறு மூர்த்தி, ஏ. முத்து, செல்வம் ஆகியோரும் பேசினார்கள்.

அமைச்சர்களை அழைத்து வருகிற 30-ந் தேதியன்று அண்ணா பிறந்தநாள் விழாக் கூட்டம் நடத்த பி. ஏ. கணபதி, எம். ரெங்கநாதன் சண்முகம் மற்றும் பி. ஆர். லட்சுமிபதி, பி. பி. சாமி, வீரராகவன் சட்சிணாமூர்த்தி உள்பட 15 பேர் கொண்ட குழு அமைக்கப்பட்டது.

### சேப்பாக்கம்

சேப்பாக்கம் 73-வது வட்டத்தில் வட்ட அமைப்பாளர் இரா. குப்புசாமி தலைமையில் நாஞ்சிலார் கொடியேற்றிவைத்தார். விழாவில் சென்னை மாநகர கழகப் பொறுப்பாளர் ஜேப்பியார், வி. ராஜ்குமார், எஸ். வி. மாரிமுத்து, பழனி, சீனிவாசன், ராணி, மீனாம்பிகை, அ. வ. செல்வக் கண்ணன் மற்றும் பலர் பேசினர்.

### 70-வது வட்டம்

70வதுவட்ட அமைப்பாளர் மொய்தீன் தலைமையில் ஜலீல் முன்னிலையில் நிதியமைச்சர் நாஞ்சிலார் கல்வெட்டைத் திறந்து வைத்தார். சென்னை மாநகர கழக பொறுப்பாளர் ஜேப்பியார் எஸ். வி. மாரிமுத்து, வி. ராஜ்குமார், மற்றும் சார்பு மன்ற நிர்வாகிகள் பேசினார்கள்.

85-வது வட்டம் 87வது வட்டம் ஆகிய இடங்களில் நாஞ்சிலார் கழகக் கொடிகளை ஏற்றி வைத்தார்.

### வெள்ளக் கோவில்

கோவை மாவட்டம் வெள்ளக்கோவில் 6-வது வார்டில் நகர அமைப்பாளர் புலிகேசி ஆறுமுகம் கொடியேற்றி வைத்தார். இரா. நந்தகோபால் சர்க்கரைபொங்கல் வழங்கினார். பல இடங்களில் கொடிகள் ஏற்றிவைக்கப் பட்டன.

### விராலிமலை

புதுக்கோட்டை மாவட்டம்விராலிமலையில் அண்ணாவிழா ஒன்றிய அமைப்பாளர் சி. சுப்பிரமணியம் தலைமையில் நடந்தது எஸ். முத்துசாமி வரவேற்றார் தென்னம்பாடி டி. சேதுராமன் இனிப்பு வழங்கினார் பல்லாயிரக்கணக்கான தோழர்கள் விழாவில் பங்கேற்றனர்.

### சத்திய மங்கலம்

கோவை சத்தியமங்கலம் அரக்கன்கோட்டை கிளையின் சார்பில் அண்ணா பிறந்தநாள் விழா சிறப்பாக கொண்டாடப்பட்டது. தொகுதி அமைப்பாளர் ஆர். ரங்கசாமி கொடியேற்றிவைத்தார். ஆர். ஆர். கோவிந்தசாமி இனிப்பு வழங்கினார் அண்ணா சிலை அலங்கரிக்கப்பட்டது ஊர்வலமாகப் போய் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தனர்.

### மதுரை

மதுரை சட்டக்கல்லூரி கழகமாணவர்கள் ஊர்வலமாகச் சென்று யானைக்கல்லில் உள்ள அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தனர் ஊர்வலத்துக்கு மாவட்ட மாணவர் கழக துணை அமைப்பாளர் சேகர் தலைமை தாங்கினார்.

சட்டமன்ற உறுப்பினர் வெ. பாலகுரு தலைமையில் மதுரை எஸ். முத்து, பொ. அன்பழகன் எம். பி., என். லட்சுமிநாராயணன் எம். எல். ஏ. ஆகியோர் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தனர்.

### உசிலம்பட்டி

உசிலம்பட்டியில் எம். ஜி. ஆர். உடற்பயிற்சி மன்றம், 11-வது வார்டு எம். ஜி. ஆர். மன்றம் அண்ணா படிப்பகம், பேருந்து நிலையம், நகர எம். ஜி. ஆர். மன்றம் நடிப்பிசைப் புலவர் கே. ஆர். ஆர். மன்றம், வத்தலக்குண்டு ஆறுமுகம் மன்றம் தொகுதி கழக அலுவலகம் ஆகிய இடங்களில் கே. மாயத்தேவர் எம். பி. கழகக் கொடியேற்றி வைத்தார். அன்பு கே. சி. மாயன் இனிப்பு வழங்கினார். வண்ணாரப்பேட்டையில் ராமையா தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. கே. மாயத்தேவர், சீனிவாசன், அன்பு கே. சி. மாயன், நகர செயலாளர் ராசேந்திரன், தலைவர் வின்சென்ட் ராமன், ஓ. ராமச்சந்திரன் மற்றும் பலர் பேசினர்.

### திண்டுக்கல்

திண்டுக்கல் நகர 3-வது வட்ட கலைமன்னன் பாரத் எம். ஜி. ஆர். மன்ற சார்பாக தண்டபாணி தலைமையில் அண்ணா பிறந்தநாள் விழா கொண்டாடப்பட்டது. 3.வது வட்டத்திற்கு உட்பட்ட நான்கு இடங்களில் மா. பாண்டித்துரை, முத்துகோபால், பி. தியாகராசன், வா. சிவநாதபாபு ஆகியோர் கழகக்கொடியேற்றினர் உதயசந்திரன் இனிப்பு வழங்கினர்.

21-வது வட்டம் ரெங்கநாதன் நினைவு எம் ஜி ஆர் மன்ற சார்பாக செயலாளர் மலைவேந்தன் தலைமையில் டாக்டர் எம். நாகராஜன், சி. சீனிவாசன் ஆகியோர் இனிப்பு வழங்கினர்.

---

# விலைவாசி குறைக்க அமைச்சர்கள் குழு அமைப்பு

புதுடெல்லி, செப். 21— விலைவாசியை கட்டுப்படுத்துவது குறித்து யோசனைகள் கூற அமைச்சர்கள் அடங்கியகுழு அமைக்க மத்திய அரசு முடிவு செய்துள்ளது.

விலைவாசி கட்டுப்பாடு கமிட்டிக்கு பாதுகாப்பு அமைச்சர் ஜெகஜீவன் ராம் தலைவர். வர்த்தக, சிவில் சப்ளை அமைச்சர் மோகன் தாரியா, சட்ட அமைச்சர் சாந்தி பூஷண் விவசாய அமைச்சர் எஸ். எஸ். பர்னாலா ஆகியோர் கமிட்டியின் மற்ற உறுப்பினர்கள்.

சட்ட அமைச்சர் சாந்தி பூஷண் வீட்டில் நடந்த அமைச்சரவையின் பூர்வாங்க கூட்டத்தில் இந்த கமிட்டி அமைப்பது என்று முடிவு எடுக்கப்பட்டது.

இந்த மாத கடைசியில் அத்தியாவசிய பண்டங்களின் விலைகளை குறிப்பாக பருப்பு வகைகள், சாப்பாட்டு எண்ணெவகைகள், காய்கறிகள் ஆகியவற்றின் விலைகளை கட்டுப்படுத்த பல நடவடிக்கைகளை கமிட்டி சிபாரிசு செய்யும்.

கமிட்டியின் முதல் கூட்டம் நேற்று நடந்தது.

---

சேரன்மாதேவி எம். எல். ஏ.

# பி. எச். பாண்டியன் கிராமம் கிராமமாக குறைகளை கேட்டார்

சேரன்மாதேவி, செப். 21— சேரன்மாதேவி தொகுதியில் கிராமம் கிராமமாக மக்கள் குறைகளைக் கேட்டறிந்த கழக சட்டமன்ற உறுப்பினர் பி எச். பாண்டியனுக்கு அனைத்துக் கட்சியினரும் சிறப்பான வரவேற்பு கொடுத்தனர்.

சேரன்மாதேவிதொகுதி எம். எல். ஏ.வும் கழக வழக்கறிஞர் பிரிவு அமைப்பாளருமான பி.எச்.பாண்டியன் சேரன்மாதேவி, கடையம், பாப்பாகுடி ஆகிய பஞ்சாயத்து யூனியன் பகுதிகளில் சுற்றுப் பயணம் செய்து மக்கள் குறைகளைக் கேட்டார்.

தெரு விளக்குகள் தேவை, பம்புசெட் மின் இணைப்பு பஸ் வசதி தேவை என்று கோரி நூற்றுக்கணக்கில் மனுக்கள் குவிந்தன. பெரும்பாலான மனுக்களை சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் நேரில் கொடுத்து பிரச்சினைகளைத் தீர்க்க நடவடிக்கைகளை மேற்கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். கரிசல்பட்டி, திருஉருத்தான்பள்ளி, உலகன்குளம், வெங்கடாபுரம் ஆகிய பஞ்சாயத்துக்களில் நிதிப்பற்றாக்குறை இருந்தது குறித்து பி. எச் பாண்டியனிடம் தகவல் தெரிவிக்கப்பட்டது.

### பஞ்சாயத்து ரோடுகள்

இதுபற்றி பஞ்சாயத்து யூனியன் அதிகாரியிடம் எடுத்துக் கூறியதைத் தொடர்ந்து பஞ்சாயத்து யூனியன் நிதியிலிருந்து மேற்கண்ட பஞ்சாயத்து ரோடுகளைப் போட அவர் உத்தரவிட்டார். முக்கூடல், அரியநாயகிபுரம் கீழபாப்பாகுடி, கோவிலூத்து, வடமலைப்பட்டி, வெங்கடாம்பட்டி, லட்சுமியூர், துப்பாகுடி, புங்கம்பட்டி, கங்கணாங்குளம் மற்றும் பல இடங்களில் நடந்த நன்றியறிவிப்புப் பொதுக் கூட்டங்களில் பி எச். பாண்டியன் எம். எல்.ஏ. பேசினார்.

கங்கணாங்குளத்தில் நடந்த பொதுக்கூட்டத்துக்கு திரவிய நாடார் தலைமை தாங்கினார்.

சேக்முகமது, மாடசாமி, சாமுவேல், சிவன்பாண்டியன், பீர்முகமது, மாசானம், சக்கீன் மாசானமூர்த்தி மற்றும் பலர் பேசினார்கள்.

கரிசல் பட்டியில் பி. எச். பாண்டியனுக்கு அனைத்துக் கட்சி சார்பில் வரவேற்பு அளிக்கப்பட்டது. ஜனதாக் கட்சியைச் சேர்ந்த தவமணி நாடார் தலைமை தாங்கினார். செல்லக்கண்ணு, அருள், ராஜா, கூனியூர் மாடசாமி, டேவிட் பாண்டியன் மற்றும் பலர் பாராட்டிப் பேசினார்கள்.

கூட்டம் நடந்த இடத்தில் பி.எச். பாண்டியன் கேட்டுக் கொண்டதன் பேரில் ஓடக்கரையில் ரூ. 3 ஆயிரம் செலவில் மராமத்து செய்ய உத்தரவிடப்பட்டது. கனடியன் கால்வாய் நீரை பாசனத்துக்கு விட வேண்டும் என்று மாவட்ட ஆட்சித் தலைவரை பி. எச். பாண்டியன் கேட்டுக் கொண்டார். இதையொட்டி கனடியன் கால்வாய் கீழ்ப்பகுதி திறக்கப்பட்டு சேரன்மாதேவிப் பகுதியில் 25 ஆயிரம் ஏக்கர் நிலத்துக்கு பாசன வசதி கிடைத்தது ஆண்டுதோறும் ஜூன் மாதத்தில் எழும் கனடியன் கால்வாய்ப் பிரச்சினையை முற்றிலும் தீர்க்கப் பாடுபடுவதாக பி. எச். பாண்டியன் உறுதியளித்தார்.

---

# மதுரை நகர் சாலை புதூர் பர்மா காலனிக்கு குடிநீர் - சாலை வசதி: உடனடி நடவடிக்கை

மதுரை, செப். 21— மதுரை கே. சாலைபுதூரில் உள்ள பர்மா காலனிக்கு சாலை, குடிநீர்வசதி செய்து கொடுக்க உடனடி நடவடிக்கைஎடுக்கப்பட்டது.

மதுரை 1-வது வார்டு கே. சாலைபுதூரில் உள்ள பர்மா காலனிக்கு சாலை அமைத்துத் தருவது குறித்து கே. சாலை புதூர் எம். ஜி. ஆர். மன்ற அமைப்பாளர் அடைக்கலசாமி நிதி அமைச்சர் நாஞ்சிலாரிடம் மனுக் கொடுத்தார்.

இதன் பேரில் 300 குடும்பங்கள்வாழும்பர்மா காலனி குடியிருப்புக்கு சாலை அமைக்கவும் குடிநீர் வசதி செய்து கொடுக்கவும் அதிகாரிகள் உடனடியாக நடவடிக்கை எடுத்தனர்.

தெருவிளக்கு நகர பஸ் ஸ்டாப்போன்ற வசதிகள் செய்து கொடுக்கும்படி உள்ளாட்சித்துறை அமைச்சர் கா. காளிமுத்துவிடம் மனுக்கொடுத்துள்ளனர்.

# அண்ணா



## பொதுக்குழு தீர்மானம்: "நதிகளை தேசிய மயமாக்குக"

சென்னை, செப். 21— காவிரி நதி நீரில் தமிழகத்திற்குள்ள உரிமைகள் நியாயமான முறையில் காப்பாற்றப்படவேண்டும். அதற்கான நிரந்தரத் தீர்வு காண சம்பந்தப்பட்ட அரசுகளுடன் தொடர்பு கொள்ளவும் தேவையானல் மத்திய அரசின் துணையைக் கோரவும் தமிழக அரசும் புதுவை அரசும் முயற்சிகள் மேற்கொள்ளவேண்டும் என்று அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகப் பொதுக்குழு கேட்டுக்கொண்டது.

சென்னை நகரில் கடந்த இரண்டு தினங்களாக நடைபெற்ற அனைத்திந்திய அண்ணா தி. மு கழகப் பொதுக்குழுக் கூட்டம் புரட்சித்தலைவரின் பேருரையுடன் முடிவு பெற்றது.

அதற்குமுன்னர் பொதுக்குழு பல தீர்மானங்களை நிறைவேற்றியது:

காவிரி நதி நீர் உரிமை பற்றிய தீர்மானத்தை துரை கோவிந்தராசன் முன்மொழிய டி. ராமச்சந்திரன், கே. சௌந்தரராசன், வி. சாமிநாதன் கோவி. நாராயணசாமி, கு. தங்கமுத்து, கோவேந்தன், திருவாரூர் தென்கோவன், திருச்சி சௌந்தரராசன், கே. சுப்பிரமணியம், தனபால், மேட்டூர் நாச்சிமுத்து, மன்னை சௌந்தராசன் ஆகியோர் வழிமொழிந்தனர்:

காவிரிநதி நீர் உரிமை பற்றிய தீர்மானம் கூறுவதாவது:

### அவர்கள் காட்டிய அலட்சியம்

குடகுமலையில் உற்பத்தியாகி, வங்காள விரிகுடாக் கடலிலே வந்து கலக்கும் காவிரி நதியின் உரிமைகள் தமிழகத்திற்கும், புதுவை மாநிலத்திற்கும் இயற்கையாலேயே அளிக்கப்பட்டுள்ள மாற்ற முடியாத உரிமையாகும். அப்படிப்பட்ட உரிமை இருந்தும்கூட காவிரி நீரைத் தக்க சமயத்தில் பெறமுடியாது தமிழக மக்கள் வேதனையோடு போராடிக் கொண்டிருக்கிறார்கள். கடந்த ஏழு எட்டுஆண்டுகளில் தமிழக அரசு ஆட்சிப் பொறுப்பிலிருந்தவர்கள் உறுதியான ஒரே நிலையில் தெளிவான முடிவுகளை எடுக்காமல், இந்தப் பிரச்சினையில் சர்ச்சைகளை வளர்த்துவிட்டிருக்கிறார்கள் என்பதை இப்பொதுக்குழு எடுத்துக் காட்ட விரும்புகிறது. காவிரி நீரின் மீது தமிழக, புதுவை மக்களுக்குள்ள யாராலும் தடைப்படுத்த முடியாத உரிமையை, இயற்கை வழங்கியுள்ள உரிமையைப் பறிக்கும் முயற்சிகளை ஆரம்பகாலத்திலேயே தடுத்துநிறுத்தாமல், அன்றைய ஆட்சிப் பொறுப்பிலிருந்தவர்கள் அலட்சியமாக இருந்து அரசியல் லாபநஷ்டங்களை மனதில் நினைத்துக்கொண்டு தமிழக, புதுவைமக்களின வாழ்வுப் பிரச்சனைக்கு பாதாரம் காணாமல், அதன் காரணமாக ... கருகும் ...

இந்த ஆண்டு போதுமான மழை இல்லாததால் ... தஞ்சை ... புதுவை ... களுக்கு ... முறை ... சேர ... காவிரி ... முத்தரப்பு ... அவர்களுக்கு ... குழு தனது நன்றியை

தெரிவித்துக் கொள்கிறது:

### நிலையான தீர்வு தேவை

என்றாலும் தஞ்சை, திருச்சி மாவட்ட விவசாயிகளுக்கு குறுவைப் பயிருக்குக்கூட போதுமான தண்ணீர் வரத்து இல்லாத நிலையில், பயிர்கள் பட்டுப் போகும் அபாய நிலையில் இருப்பதை கருநாடக அரசுக்கும் மத்திய அரசுக்கும் எடுத்துக்காட்டி தமிழகத்திற்கு நியாயமாகக் கிடைக்கவேண்டியகாவிரி நீரைத்தேக்கி வைத்திருக்கும் அணைகளிலிருந்து கருநாடக அரசு திறந்துவிடுவதன் மூலம் விவசாய களைக்காத்திட வேண்டுமென இப்பொதுக்குழு கேட்டுக் கொள்கிறது.

மேலும், காவிரி நதிநீரில் தமிழகத்துக்குள்ள உரிமைகள், நியாயமான முறையில் காப்பாற்றப்பட வேண்டும். அதற்கான நிரந்தர தீர்வுகாண சம்பந்தப்பட்ட அரசுகளுடன் தொடர்பு கொள்ளவும் தேவையானல் மத்திய அரசின் துணையைக் கோரவும் முயற்சிகள் மேற்கொள்ள தமிழக அரசையும் புதுவை அரசையும் இப்பொதுக்குழு கேட்டுக்கொள்கிறது.

இதுபோன்ற ஒன்றுக்கு மேற்பட்ட மாநில மக்களின் வாழ்க்கையோடு இணைந்த பிரச்சினைகளில் நிரந்தரத் தீர்வு காண்பதற்கு உதவியாக மாநிலங்களுக்கிடையே பாயும் நதிகளை தேசிய சொத்தாக அறிவிக்க ஆவன செய்ய வேண்டுமென இப்பொதுக்குழு மத்திய அரசை கேட்டுக் கொள்கிறது.

### கைத்தறி

கைத்தறி நெசவுத் தொழில் தற்போதுள்ள நலிவு நிலையிலிருந்து பாதுகாக்கப்பட வேண்டுமென்று அண்மையில் டெல்லியில் மத்திய அரசின் சார்பில் கூட்டப்பட்ட தொழில் அமைச்சர்கள் மாநாட்டில் கைத்தறிகளுக்கென்று ஒதுக்கப்பட்டுள்ள கரை போட்ட வேட்டி, சேலைகள் உற்பத்தியை முழுமையாக கைத்தறி தொழில் அனுபவிக்க முடியாத நிலைமை ஏற்பட்டுள்ளது: காரணம் விசைத்தறி துணி மில்களிலும் நடைமுறைகமாக சட்டத்தை மீறி துணிகளை உற்பத்தி செய்வதால் கைத்தறிகள் பாதிப்படைந்துள்ளன என்பதை அழுத்தந்திருத்தமாக மத்திய அரசினிடம் எடுத்துரைத்து அதை அமல்படுத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்ட தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் அவர்களை இப்பொதுக்குழுவின் மூலமாகவும் முப்பது லட்சம் கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் சார்பாகவும் நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக்கொள்கிறது:

கைத்தறி நெசவுத் தொழிலைக் காப்பாற்றவும் நெசவுதொழிலாளர்களின் தற்போதைய வறுமை நிலையை போக்கவும், அளவிற்குமேல் ஏறி நிற்கும் பருத்தி நூல், செயற்கை பட்டுநூல் சாயபொருட்களின் விலைகளை கணிசமாக்குறைத்து நியாயமான விலையில் கிடைக்க மத்திய அரசு நடவடிக்கை எடுக்கும்படி மாநில அரசு வலியுறுத்தியிருப்பதை வரவேற்று இப்பொதுக்குழு தமிழக அரசை பாராட்டுகிறது என்ற தீர்மானத்தை அனகாபுத்தூர் சி. ராமலிங்கம் முன்மொழிந்தார். பழனிச்சாமி, கரூர் சாரங்கபாணி, திருவில்லிபுத்தூர் ஆறுமுகம் அருப்புக்கோட்டை ஆறுமுகம், காஞ்சி பாலாஜி, ஆத்தூர் வெள்ளைச்சாமி, பாகூர் சுப்ரமணியம், டிசு சந்தலா, மதுராந்தகம் சண்முகம், காட்டூர் கிருஷ்ணசாமி ஆகியோர் வழி மொழிந்தனர்.

### அரசுக்கு நன்றி

அரசு அமைத்து, 80 நாட்களுக்குள் மக்களின் நலன்காக்கும் நற்பணிகளில் ஈடுபட்டு பேரறிஞர் அண்ணா அவர்கள் வழியில் நின்று ஏழை எளிய மக்களின் அரசாகச்செயல்பட்டுவரும் தமிழக அரசுக்கும், தமிழக முதல்வர் மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களுக்கும் பாராட்டுத் தெரிவிக்கும் தீர்மானத்தை குடந்தை எஸ். ஆர். ராதா முன்மொழிய திருநாவுக்கரசு, இரா. மணிமாறன், இரா. முத்தையா, நாசில் வின் சென்ட் ஆகியோர் வழி மொழிந்தனர்.

ஒவ்வொரு தீர்மானம் நிறைவேறும் போதும் பொதுக்குழு உறுப்பினர்கள் கரமுழக்கம் செய்து தங்கள் ஒப்புதலையும், பாராட்டினையும் தெரிவித்தனர்.

### சேலம் இரும்பாலை

1971-ஆம் ஆண்டில் முன்னாள் பிரதமரால் துவக்கப்பட்ட இரும்பாலை திட்டம் இத்தனை ஆண்டுகளாக பல்வேறு காரணங்களால் ஒத்தி வைக்கப்பட்டு, தற்போது ஸ்டெயின்லஸ் ஸ்டீல் உருக்குவதும், வார்ப்படம் செய்வதும் துர்க்காபூருக்கு மாற்றப்பட்டிருப்பதை இப்பொதுக்குழு கண்டிக்கிறது; பூர்வாங்க திட்டத்தின்படி சேலம் தொழிற்சாலையிலேயே ஸ்டெயின்லஸ் ஸ்டீல் உருக்கி வார்ப்படம் செய்யும் திட்டத்தை விரைவுபடுத்த வேண்டும் என்ற தீர்மானத்தை சு. ஆர். கிருஷ்ணன் முன்மொழிந்தார்.

குந்தை வேலு, வெங்கடேசன், மா. சம்பத் கோவை மருதாசலம், புதுவை மணிமாறன், வை. பெருமாள், பவானி, பழனியம்மாள், தி. மலரவன், கோவை நடராசன், சுப்புலட்சுமி ஆகியோர் வழிமொழிந்தனர்.

இங்கிலீஷ் எலக்ட்ரிக் கம்பெனி

### கதவடைப்பு: அனைத்துத் தொழிலாளர் கண்டனம்

சென்னை செப். 21— பல்லாவரத்தில் உள்ள இங்கிலீஸ்எலக்ட்ரிக் கம்பெனி கதவடைப்புச்செய்துள்ளதை அனைத்துத் தொழிலாளர்களும் கண்டித்துள்ளனர்.

போனஸ் பற்றி பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருக்கும் போது முன் அறிவிப்பு இல்லாமல் சட்ட விரோதமாக நிர்வாகம் கதவடைப்புச் செய்துள்ளதை அனைத்துத் தொழிலாளர்களும் வன்மையாகக் கண்டித்துள்ளனர்.

நிர்வாகம் சுமுகமாக பேச்சுவார்த்தை நடத்தி தொழிலாளர்களின் போனஸ் பிரச்சினைக்கு முடிவுகாணும்படி அனைத்து தொழிற்சங்கங்களும் கோரி உள்ளன.

## கழக அமைச்சரவை: புரட்சிதலைவர் பேட்டி

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

எப்படி சரியாகும்:

7 ஆண்டுகள் முதல்வராக இருந்தவருக்கு போக்குவரத்து ஆபத்து இடங்கள் தெரியாதா?

சே: காங்கிரஸ் காரர்கள் காமராஜ் சிலை வைக்க அனுமதிக்கப்படுவது எப்போது?

புரட்சித்தலைவர்: பார்த்துச்சொல்கிறேன்.

நிருபர்: இந்தப் பிரச்சினை சுமுகமாக தீரவாய்ப்பில்லையா?

புரட்சித்தலைவர்: பிரச்சினை இல்லாத இடத்தைக் கேட்க வேண்டும். சாலையின் மத்தியில் வைத்தால் விபத்து ஏற்படும் என்று அதிகாரிகள் பதில் அளித்துள்ளனர்: சிலைக்கு முன்பு போக்குவரத்து காவலர் நிற்பது சிலைக்கு மரியாதை தந்ததாகவும் ஆகாது. யாராவது ஒருவர் விட்டுக் கொடுக்க வேண்டும்: காங்கிரஸ்காரர்கள் விட்டுக் கொடுத்தால் இவர்கள் அந்த இடத்தில் ஒரு முனையில் வைக்கலாம்.

### அவைத்தலைவரா கட்சி தலைவரா?

நிருபர்: நாவலர் அவைத்தலைவர் என்பது கட்சித்தலைவர் என்று பொருளா?

புரட்சித் தலைவர்: கழக பொதுகுழு செயற்குழு கூட்டங்களுக்கு தலைமை வகிப்பார்.

கேள்வி:— தி. மு. கவில் சம்பத் இருந்ததுபோலவா

புரட்சித்தலைவர்:— அதுபோலத்தான்: அண்ணா வழியில் கழகத்திற்கு தலைவர் கிடையாது. இதுவரை எப்படி இருந்ததோ அப்படித்தான் இனியும் இருக்கும்.

நாவலர்:— தி. மு. க. விலும் அவைத்தலைவர் என்று தான் இருந்தது. கருணாநிதி அவைத்தலைவராக வந்தபோது கழகபொதுச் செயலாளர் அவருடன் கலந்துபேசி முடிவு எடுக்க வேண்டும் என்று விதி சேர்க்கப்பட்டது. ஏற்கனவே இருந்த விதிதான் இங்கு இருக்கிறது:

கேள்வி: தொழிலாளர் பிரச்சினை பற்றி ஏதாவது முடிவு எடுக்கப்பட்டுள்ளதா?

புரட்சித்தலைவர்: இன்னும் இரண்டு மூன்றுநாட்களில் இதுபற்றி சொல்கிறேன்.

நிருபர்: வர்த்தகத் தலைவர் ஒருவர் இங்குதொழில் நெருக்கடி இருப்பதாக சொல்லி இருக்கிறாரே?

புரட்சித்தலைவர்:— அது அவர் கருத்தாக இருக்கலாம், என்னுடைய கருத்தை இன்னும் 3 நாட்களில் சொல்கிறேன்.

### பிரதமருடன் சந்திப்பு உண்டா?

நிருபர்:— பிரதமர் தேசாயுடன தனியாக சந்தித்துப் பேசஇருக்கிறீர்களா?

புரட்சித் தலைவர்— ஏற்கனவே டெல்லியில் பிரதமருடன் பேசி இருக்கிறேன்: புதிதாக பிரச்சினை எதுவும் இல்லை.

அரங்கு நிறைந்த 100 காட்சிகள்:

### மீனவ நண்பன் வெற்றி: மன்றத் தோழருக்கு பரிசு

சென்னை, செப். 21— புரட்சித் தலைவர் நடித்த "மீனவநண்பன்" படம் சென்னை தேவி பாரடைஸ் திரையரங்கில் 100 காட்சிகள் அரங்கு நிறைந்த காட்சிகளானதையொட்டி சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் கல்யாணசுந்தரத்திற்கு பரிசளிக்கப்பட்டது.

செய்தி சுற்றுலா துறை அமைச்சர் ஆர். எம். வீரப்பன், திரையரங்கு உரிமையாளர் சார்பில் மன்றத் தலைவர் கல்யாணசுந்தரத்திற்கு கைக்கடிகாரம் பரிசளித்தார்: திரையரங்கு உரிமையாளர்கள் ராஜகோபால் செட்டியார், வரதராஜ செட்டியார், கவுரி செட்டியார், கண்ணன், அரிஹரன் ஸ்ரீகாந்த் ஆகியோர் கலந்து கொண்டார்கள்.

மன்றங்களின் சார்பில் ராகவன் தாமோதரன், குப்புசாமி, கோவை கணேசன், சத்தியசீலன், முனியன், சலீம் பாட்ஷா, நடராசன், அமீது, பெரியசாமி, மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

### காங்கிரஸ் ஊர்வலம்

சென்னை, செப் 21— விலைவாசி உயர்வை மத்திய ஜனதாக் கட்சி அரசுகட்டுப்படுத்த தவறிவிட்டது என்றுகூறி காங்கிரஸ் கட்சி தமிழ்நாடு முழுவதும் கண்டன ஊர்வலங்கள் நடத்தியது. சென்னையில் மூர் அங்காடி அருகில் இருந்து தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ஜி. கருப்பையா மூப்பனர் தலைமையில் ஊர்வலம் புறப்பட்டு கலெக்டர் அலுவலகம் சென்றடைந்தது.

ஊர்வலத்தில் எஸ். எம். நாராயணன், அனந்தநாயகி, ஏ. ஜே. தாஸ், கே. ஆறுமுகம், ஹஜ ஷெரீப் மார்க்ஸ் ஆகியோர் உட்பட 5 ஆயிரம் பேர் கலந்து கொண்டனர்.

அவர்கள் தந்த கோரிக்கை மனுவை ஏற்றுக் கொண்ட கலெக்டர், அதை மத்திய அரசுக்கு அனுப்பி வைப்பதாக உறுதி கூறினார்.

இந்த ஊர்வலம் நாடு அரசை எ... நடத்தப்படுவது ... மத்திய அரசை எதிர்த்து நடத்தப்படுகிறது என்று கருப்பையா மூப்பனர் முன்னர் அறிவித்தது தெரிந்ததே.

### எம். ஜி. ஆர் மன்ற நிர்வாகிகள்

தெயக்கனி எம். ஜி. ஆர். மன்றம்
9 டி. வி. நாய்க்கன் தெரு
சி. பி. ரோடு
ஸ்டான்லிநகர்:
சென்னை-21
வட்டம் 27

தலைவர்: ஜி. திருவேங்கடம் துணைத்தலைவர்: விஜய் ஆனந்த் செயலாளர் ஜி. பி. ராமன் துணைச் செயலர்: வேதசெல்வம் பொருளாளர்: ஜான் மற்றும் 30 நபர்கள்.

எம். ஜி. ஆர். மன்றம்
புழல் சென்னை-66

தலைவர்: த. சந்திரன் செயலர்: சிதம்பரம் வாள்மூர்த்தி துணைத் தலைவர்: ஆர். மனோகரன் துணைச் செயலர்: பி. பொன்னுரங்கம் பொருளாளர், எம். ராவணன்

எம். ஜி. ஆர். மன்றம் அண்ணா அறிவுக்கூடம்
புழல் சென்னை-66

தலைவர்:— வி. வேதாசலம், செயலர்:— கே. கோட்டீஸ்வரன், (தாசன்) பொருளாளர்: சாமிநாதன் மற்றும் 35 நபர்கள்:

நவரத்தினம் எம். ஜி. ஆர். மன்றம்
A 11 V.K.M. கார்டன்
சைதை சென்னை-15.
120வது வட்டம்

தலைவர் மார்க்கெட் ஜி. கோவிந்தன், துணைத் தலைவர் எஸ். திருஞானம் செயலர்: வி. என். சாகுல் ஹமீது, துணைச்செயலர் பி. பூமாலை பொருளாளர் எஸ். கண்ணன், காப்பாளர்: எம். சாமியன் செயற்குழு உறுப்பினர்கள் 11 பேர்

புரட்சித் தென்றல் எம். ஜி. ஆர். இளைஞர் மன்றம்
வேலாயுத பாண்டியன் தெரு,
சென்னை-21
7-வது வட்டம்

தலைவர்: எஸ். சுந்தர்ராஜி செயலர்: வை. முத்து. து. செயலர்: டி. தேரு. பொருளாளர்: விஜயமூர்த்தி, காப்பாளர்: மதுசூதனன் மற்றும் 25 நபர்கள்.

புரட்சிதலைவர் எம். ஜி. ஆர் பொதுப்பணி மன்றம்
ரெட்டியார் தோட்டம்
மயிலாப்பூர்
சென்னை-4
92-வது வட்டம்

தலைவர்:— எம். பொன்னுரங்கம் செயலர் இ. தனசேகரன் பொருளாளர் வி. ரமேஷ் துணைச்செயலாளர் பி. மணவண்ணன் காப்பாளர்: ஆர். செல்லப்பன் மற்றும் 11 பேர்கள்:

புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். மனறம்
அண்ணாநகர்
தாண்டவன் குப்பம்
நெய்வேலி-2 மு. ஆ.

தலைவர்: எம். செல்லத்துரை, செயலாளர்:— என். கே. பி. ராஜன், பொருளாளர்: எம். வையாபுரி, துணைத்தலைவர்: ஏ. பொன்னையா, துணைச் செயலாளர்: பி. சொக்கலிங்கம், வட்டப்பிரதிநிதி ஜி. பிச்சைமுத்து, செயற்குழு உறுப்பினர்கள் 7 பேர்.

எம், ஜி. ஆர், மன்றம்
... கல்லவரா
கோவல் தெரு
கீரைத்துறை
மதுரை-1

தலைவர்: டி. பாபு, துணை தலைவர்: வி. ஜேசப, செயலாளர் ஏ. பால கிருஷ்ணன், துணைச் செயலாளர்: ந. பாலு, பொருளாளர்: தம்பூராசன் செயற்குழு தலைவர்: ராயப்பன்.

PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF M. S THANGAMANI PUBLICATIONS FROM 156, LLOYDS ROAD, MADRAS-14 AND PRINTED BY R. THANGARAJAN AT NAVASAKTHI PRESS, 60, KUTCHERI ROAD MADRAS-4.
EDITOR: M. G. CHAKRAPANI

## அறிஞர் அண்ணா பிறந்த நாளில் கிராமப்பகுதிக்கு புதிய பேருந்து

தேனி, செப்: 21— பேரறிஞர் அண்ணா பிறந்த தினத்தன்று கம்பம் கிராமப்பகுதிகளின் நெடுநாள் கோரிக்கை நிறைவேறியது. அன்று தேனி சட்டமன்றத் தொகுதியைச் சேர்ந்த வெள்ளையம்மாள்புரத்திற்கு கம்பத்திலிருந்து நகரப் பேருந்து விடப்பட்டது.

துவக்க நிகழ்ச்சிக்கு நாடாளுமன்றஉறுப்பினர் கூடலூர் எஸ். ராமசாமி தலைமை வகித்தார்: கிராமப்பகுதிகள் வழியாகவே செல்லும் நகரப் பேருந்தினை அவர் இயக்க தேனி சட்டமன்றத் தொகுதி உறுப்பினர் ஜெயராமன் முதல் பயணச் சீட்டை வழங்கினார்.

இந்த நகரப் பேருந்துக்கு வழி நெடுகிலும் உள்ள கிராம மக்கள் வரவேற்பு அளித்தனர்: ஓடைப்பட்டி மக்கள் நகரப் பேருந்தை வரவேற்று வந்திருந்த அனைவருக்கும் கைத்தறி ஆடைகள் அணிவித்து மகிழ்ந்தனர்:

கம்பத்திலிருந்து வெள்ளையம்மாள் புரத்திற்கு கிராமப்பகுதிகள் வழியாக நகரப்பேருந்து விடவேண்டும் என்று அந்தப் பகுதி மக்கள் காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் கோரினர், கருணாநிதி ஆட்சிக்காலத்திலும் கோரினர், அவர்களது கோரிக்கை புரட்சித்தலைவர் ஆட்சிக் காலத்தில் நிறைவேறியிருக்கிறது.

### ராமேசுவரம்

சென்னை செப் 21— ராமேசுவரம் கீழரத வீதியில் ஆர். வேலாயுதம் தலைமையில் பல இடங்களில் கழகக் கொடி இனிப்புவழங்கப்பட்டது. பாண்டி ... நம்பிராஜன், செல்லம், காதர், குமாரசேகரன் ... பலர் கலந்து கொண்டனர்.

தலைஞாயிறு ஒன்றியம் ஆய்மூரினின் பல்வேறு இடங்களில் அமைப்பாளர் ... சோமு கழகக் கொடி ஏற்றினர்; இனிப்பு வழங்கப்பட்டது.